Registered No. M. 2330.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"

மலர் ௬ | ஸ்ரீமுக ஆண்டு மார்கழித் திங்கள் 1933 ௵ டிசம்பர்மீ | இதழ் ௧௨

## நிட்டை கூடினோர்க்கே பரமுத்தி

[ச. பொன்னுஸ்வாமிக் குருக்கள்]

குருவினது அநுக்கிரகத்தினாலே கேவல நிலையில் ஆணவமலத்தான் வந்த அறியாமையும், சகலநிலையில் மாயா கருவிகரணங்களான் வரும் அறிவுமாகிய இருவகைப் பாசங்களும் நீங்கி, தம் அறிவின்கண்ணே கேட்டலறிவினைக் கேட்கு முறையிற் கேட்டுச் சிந்திக்கும் முறைமையிற் சிந்தித்து அந்தக்கரணங்களோடு சேராது அடங்கிச் சிவத்தில் அன்பு செய்து நிற்கப் பெறுவரானால், பிரிதலில்லாத அச்சிவத்தியல்பு கேட்டற்காலத்துப் பொருட்டன்மை பற்றிப் பேதமாய்த் தோன்றிச் சிந்தித்தற்காலத்து அனைத்தினுங் கலப்புப்பற்றி அபேதமாய்த் தோன்றித் தெளிந்தபின் இவ்விரண்டுமில்லாது நுண்ணியதும் பரியதுமாயதோர் முறைமைபற்றி எப்பொழுதும் எவற்றிலும் ஒற்றித்து நின்றே ஒன்றிலும் பற்றிலனாய் வேறு தோன்றும். தெளிதலும் அதன்கண் நிகழும் அநுபவமும் இவையாம்.

வியாபகமாகிய ஆன்மா அவ்வியல்பு இழந்து ஏகதேசப்பட்டுக் கீழே நரகத்திற் சென்று துன்பத்தை யனுபவித்தற்குக் காரணமாகிய பாவமும், மேலே சுவர்க்காதிகளிற் சென்று இன்பத்தை யனுபவித்தற்குக் காரணமாகிய புண்ணியமும் பந்தமே யாகலின், அவற்றைத் தெளிதலுணர்வெனப்படு மாத்தா னறுத்துக், காரணமாகிய புண்ணிய பாவங்கள் இல்லாமையிற் காரியமாகிய பூமி நரக சுவர்க்கங்களிற் செல்லுதலாகிய ஏகதேசச் செலவும் இல்லா தொழிந்தாராகி, கரணங்களின் வசத்தாராதலுமின்றிச் சிவ வியாபகத்திற் கூடி இம்மையே சீவன்முத்தராய் வாழ்ந்து, அழுக்கி னீங்கியபொழுது

ஆடையினது வெண்மை ஆடை முழுவதும் விளங்கினாற்போல, இவ்வுடம்பு நீங்கப்பெறும் பரமுத்தி நிலையில் தமது வியாபக முழுவதும் அறிவு விளங்கப்பெற்றுச் சிவத்தினோடு ஒத்து நிற்பர். நிட்டையும் அதன் பயனும் இவையாம்.

இங்ஙனங் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை யென்பன நான்கும் ஞானங்களாய், முடிந்த ஞானமாகிய நான்காய் என்னுமுறைக்கண் நின்ற நிட்டை பரமுத்திக்கு நேர் சாதனமாயும், முன்னைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் ஞானம் மூன்றும் நிட்டைக்குச் சாதனங்களாயு மிருக்கும். கேட்டல் முதலிய மூன்றும் பரமுத்திக்கு நேர் சாதனமாகாது பரம்பரையிற் சாதனமாதலுடையனவாம்.

ஆதலினால், முத்தியையடைய விரும்பினோன், இந்த ஞானமாகிய சாதனத்தைச் செய்தல் வேண்டும்.

இனிக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல்கள் பரமுத்திக்குப் பரம்பரைச் சாதனமாதலோடு அபர முத்திக்கு நேர் சாதனங்களாகவும் நிற்கும்.

கேட்டல் ஞானத்திற் சரியை யெனப்படும். சிந்தித்தல் ஞானத்திற் கிரியை யெனப்படும். தெளிதல் ஞானத்தில் யோகமெனப்படும். நிட்டை ஞானத்தில் ஞானமெனப்படும். இம்மையிற் கேட்டலளவில் நின்றோரும், கேட்டல் சிந்தித்தல் அளவில் நின்றோரும், கேட்டல் சிந்தித்தல் தெளிதலளவில் நின்றோரும் அதிகார தத்துவம் போக தத்துவங்களில் எய்தி அபர முத்தி பெறுவர். நிட்டையில் முயன்று மேவாது தவறினவர் இலய தத்துவங்களிலெய்தி அபரமுத்தி பெறுவர். நிட்டை மேவினோரே பரமுத்தியடைவர்.

## ஒரு சிறந்த நன்கொடை

[பத்திராசிரியர்]

நமது சமாஜம் செய்துவரும் அரும்பெரும் பணிகளைப் போற்றி அப்பணிகட்கு உதவியாக முசிறி தாலுக்கா மேட்டுப்பாளையம் போர்டு ஸ்கூல் உபாத்தியாயர் சைவத் திருவாளர் - எஸ். குமாரவீரையரவர்கள் நமது சமாஜத்துக்கு நூறு ரூபா நன்கொடை யளித்துள்ளார்கள்.

"என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள் கொடுப்பர் தீதற்றோர்"

என்ற முதுமொழிக்கு இலக்கியமாக இப்பெரியார் தாமாகவே மனமுவந்து இவ்வரிய நன்கொடையை யளித்தது மிகப் பெரிதும் போற்றத்தக்கது. வெணவா வேர்விட்டோடும் விழுநிதியும் வெறுந் திருநீற்றுப் பூச்சும் உடைய சைவச் செல்வர்கள் இத்தகைய நன்கொடையைப் பார்த்தாவது வெட்கித் தலை குனியாது தத்தம் மனப்பாங்குக்கேற்ப நமது சமாஜத்துக்கு உதவி புரிந்து சைவத்தையும் தமிழையும் வளர்ப்பார்களாக. குமாரவீரையர் நீடூழி வாழி வாழி.

# நமது பத்திரிகை

[காரியதரிசி]

நமது பத்திரிகை இப்போதுள்ள ராயல் அளவிலிருந்து கிரவுன் அளவிற்கு மாற்றப்பட வேண்டுமென்று சென்ற ஆண்டின் தொடக்கத்திலேயே முயற்சி செய்யப்பட்டது அங்கத்தினருக்கு ஞாபகமிருக்கும். பல அங்கத்தினர் அவ்வாறு மாற்றுவதே நலமென்று நமக்கு எழுதியிருந்தனர். ஆனால் நிர்வாக சபையினர் அளவை மாற்றக் கூடாதென்றும், காகிதத்தை மாற்றி விடலாமென்றும் அப்போது தீர்மானித்தனர்.

பல அங்கத்தினர் நமது பத்திரிகையைக் கிரவுன் அளவுக்கு மாற்றுவதே நலமென்றும், ரப் காகிதத்தை உபயோகிக்கலாகாதென்றும், திருவாசகம் உரைத் தாள்கள் மடிந்துபோவதால் பின்னர் பைண்டு செய்வதற்கு வசதிக் குறைவேற்படுமென்றும் பன்முறை தெரிவித்தார்கள். இவற்றையெல்லாம் ஆராய்ந்து நிர்வாக சபையினர் பத்திரிகையின் அளவைக் கிரவுன் அளவுக்கு மாற்றுவதாகத் தீர்மானித்துவிட்டனர். எனவே, 1934-வரு ஜனவரிமீ இதழ் (அதாவது அடுத்த இதழ்) திருவாசக உரை வெளிவருகின்ற அளவாகிய கிரவுன் அளவிலேயே வெளிவரும். அடுத்த மாதந் தொடங்கி "சித்தாந்த சாத்திரம்" பதினான்கு என்று கூறப்படும் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலிய பதினான்கு சாத்திரங்களும் மூலமும் உரையுமாகத் தொடர்ச்சியாக நமது பத்திரிகையில் வெளிவரும் என்ற நற்செய்தியை மிக மகிழ்ச்சியோடு தெரிவிக்கின்றோம். நமது நண்பர்கள் தாங்கள் சந்தா செலுத்திப் பத்திரிகையை ஆதரிப்பதோடமையாது மேன்மேலும் புதிய அங்கத்தினரைச் சேர்த்து உபகரிக்க வேண்டுகிறோம்.

## முக்கிய அறிக்கை

தங்கள் சந்தாவை 1-1-1934-க்குள் அனுப்பிவிடவும். இல்லாவிடில் அடுத்த இதழ் வி. பி. யில் வரும். அதனால் தங்கட்கு வி. பி. செலவு அணா 3 வீண் நஷ்டமாகும்.

காரியதரிசி.

# திருத்தொண்டர் புராணச் செய்யுட்டொகை

[சீகாழி வித்துவச்சிகாமணி - ப. அ. முத்துத் தாண்டவராயப் பிள்ளை]

திருத்தொண்டர் புராணம் பல பாடங்களோடு பல பதிப்புகள் வெளிவந்துள்ளன; இனியும் பல பிரதி பேதங்களோடு சில பல பிரசுரங்கள் வெளிவரவுங் கூடும். திருக்கோவை, திருக்குறள் இன்னோன்ன நூல்கள் உரையாசிரியர் காலத்தே பல ரூபங்களோடு உலாவி வந்தன. இந்நிலையில் இன்ன ரூபமே சேக்கிழார் காலத்தது என்று திட்டமாக அறிதல் யாவர்க்கும் இயலாது. இஃதிங்ஙனமாக, பெரியபுராணச் செய்யுட் டொகையும் இத்துணையதென எங்ஙனம் அறிதல் கூடும்? இப்புராணம் பல பெரியோர்களால் நாநா தேசாதீத அநேக கோசங்களைக் கொண்டு செவ்விதின் ஆராய்ந்து சிறப்புற முத்திரிக்கப்பட்டது. இக்காலத்து ஆராய்ச்சியாளர் சிலர் தத்தம் கருத்துக்கேற்பச் சிற்சில திருவிருத்தங்கள் சேக்கிழாருடையன அல்ல எனத் துணிந்து பல ஆதாரங் காட்டுவர். 1864ஞு கும்பகோணத்திலிருந்து மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலியோரால் அழைக்கப் பெற்று ஆறுமுக நாவலர் இரண்டாம் முறை திருவாவடுதுறைக்கு வந்த காலையில், ஆங்கிருந்து பல வித்வான்களோடும் பெரியபுராணப் பிரதிகளைப் பரிசோதித்து அச்சுக்கு வேண்டியவாறமைத்து முடித்து, அதனை அக்காலத்து அச்சிடாமல் அப்புராண வசனத்தை வெளியிட்டருளினர். பின்னர் அச்சாகுங் காலத்தே, சில சூசனமாத்திரம் எழுதப்பட்டு இடையில் நிறைவேறாமற் போயின. அந்நாவலர் சித்தஞ் செய்த பிரதியே பின்னர் அச்சுயந்திர சாலையில் அச்சுக்கு வந்தது. அந்நாவலர்பால் பெரியபுராணம் கேட்டுணர்ந்த திருவண்ணாமலை ஆறுமுகத் தம்பிரானுர் அக் கையெழுத்துப் பிரதியோடு ஏனைய கோசங்களையும் ஒத்துப் பார்த்துப் பதவுரையோடு வெளியிட்டனர். ஆறுமுக நாவலரது கையெழுத்துப் பிரதியையும், பெரியபுராண வசனப் பிரதியையும் நேரில் அவரிடம் பெற்ற அவர் முதல் மாணுக்கர்களுள் ஒருவராகிய சிதம்பரம் பே. இராமலிங்கம் பிள்ளையவர்கள் இவ்விரண்டனையுஞ் சேர்த்து ஒரு சிறந்த பதிப்பு வெளியிட்டுள்ளார். இந்நூல்களையும், இந்நூலின் மற்றப் பிரசுரங்களையும் நன்கு நோக்கியே சென்னைச் சுப்பராய நாயகரவர்கள் பொழிப்புரை ஒன்றியற்றித் தமக்குக் கிடைத்த பிரதி ரூபங்களோடு பெரியபுராணத்தைச் செம்மையாக வெளியிட்டனர். இப்பிரதிகள் யாவும் முன் பின் ௪உஅ௬ செய்யுள்களை யுடையன. சேக்கிழார் புராணத்து ௫௧-வது செய்யுளில் பெரியபுராணச் செய்யுட்டொகை ௪உ௫௩ என வரைந்

---

[குறிப்பு:—பெரியபுராணச் செய்யுட்டொகை விஷயமாகச் "செந்தமிழ்" 17-ம் தொகுதி 345-ம் பக்கம், 18-ம் தொகுதி 321, 499-ம் பக்கங்களில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதி நிலையத்து சைவ நூற்பண்டிதர் - திருவாரூர் - இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை - சோமசுந்தர தேசிகர் அவர்கள் எழுதிய கட்டுரைகள் இதனோடு வைத்து ஆராய்தற் குரியன.—பத்திராசிரியர்.]

துளது. இச் சேக்கிழார் புராணம் பல பெரியபுராண ஏடுகளோடு அன்றிச் சிற்சில ஏடுகளே பல பிரதி பேதங்களோடு காணப்படுவன ; இச்செய்யுட் டொகையும் வேறுபட்டுத் தோன்றுவன.

இப் புராணத்தை முதற்கண் கண்டு, இதன் நூலாசிரியர் உமாபதி தேவர் எனத் துணிந்து பாயிரம் கூறிய நாவலர் அவர்களே இச் செய்யுட் டொகையைப் பாராட்டாது, தமது பெரியபுராணப் பிரதியைத் திருத்தஞ் செய்து தம் மாணக்கருக்கும் போதித்தார். ஆதலின் சேக்கிழார் புராணத் திற் கண்ட இச்செய்யுட் டொகையைப் பல பிரதிகளைக் கொண்டு ஆராய் வதே நமது முக்கிய கடனாயிருக்க, அதனை விட்டுப் பெரியபுராணச் செய் யுட்களில் எந்த ௩௩ செய்யுட்களை விடுவது என விமரிசனம் செய்வது யுக்தமாகத் தோன்றவில்லை ; வெள்ளி ப்பாடல் இவையெனச் சிலர் வழங்கும் அச்செய்யுட்களை அவ்வாறே கொள்ளுதல் தவிர்தல்கள் ஒழித்து, மற்றுஞ் சில செய்யுட்களை இடைச்செருகல்கள் எனத் துணிவது அமைவுடைய தன்று. ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இடையில் 'உலகெலாம்' என வந்ததாகக் கூறும் 'சோதி முத்தின்' என்ற செய்யுள் இம்மஹா புராணத் தின் நடுத்தொகையை அன்றிச் சமீபத் தொகையையும் மத்தியகத சம்ப வத்தையும் குறித்தற் கெழுந்தது. இங்ஙனங் கொள்ளாக்கால் எவ்வழிச் செல்லினும் முட்டுப்படும். திருத்தொண்டர் புராணச் செய்யுட் டொகை யெனப் பல நூற்றுண்டுகளுக்கு முன் அபியுக்தர் ஒருவர் எழுதிய இவ்வேடு இங்கு வெளியிடப்படுகின்றது. ஆராய்ச்சியாளர்க்கு இஃது ஒரு சிறிது பயன் உதவுமென் றெண்ணுகிறேன்.

## திருத்தொண்டர் புராணச் செய்யுட்டொகை

திருவருள்சேர் திருத்தொண்டர் கூட்டந் தன்னைச்
சேக்கிழா ரெடுத்துரைத்த செய்யுள் சொல்லின்
மருவுதிரு மலைச்சருக்க மைம்பான் நாட்டு
வளமுப்பத் தஞ்சு,மனு வேந்தற் கைம்பான்
பொருவினெறித் திருக்கூட்டம் பதினென் றுரும்
புகழ்நாவ லூர்க்கோவுக் கிருநூற்று மூன்றும்
அருணெறிசேர் தில்லைவா ழந்தணர்க்குப் பத்தாம்
அணிகொண்ட குயவற்கு நாற்பத்து நாலே. (௧)

நாமேத்து மியற்பகைக்கு முப்பத் தாறு
நல்லிளையான் குடிமாற னிருபத் தேழாம்
பாமேவு மெய்ப்பொருளுக் கிருபா னறு
பயனறியும் விறன்மிண்டர் பதினென் றுரும்
தேமேவு மமர்நீதி நாற்பத் தொன்பான்
தீவினைதீ ரெறிபத்த ரைம்பத் தேழாம்
காமேவு மேனதி நாற்பத் திரண்டு
கண்ணப்பர் தமக்குநூற் றெண்பத் தாறே. (௨)

ஆறான தொழிற்கலையன் முப்பத் தஞ்சாம்
அம்மானக் கஞ்சாறன் முப்பத் தெட்டே
மாறாய வாட்டாய னிருபத்து மூன்று
மருவுபுக ழானயன் நாற்பத்திரண்டாம்
மீறாத மூர்த்திக்கு நாற்பத் தொன்பான்
மிக்கமுரு கர்க்குரைத்தல் பதினா லாகும்
மாறாத வுருத்திர பசுபதிக்குப் பத்தாம்
மருந்தனைநா ளைப்போவார் முப்பத் தேழே. (௩)

எழுந்தகுறிப் புத்தொண்டர் நூற்றிருபத் தெட்டாம்
இயல்சண்டே சர்க்குரைத்த லறுப தாகும்
தொழுமரசர் நானூற்றின் இருபத் தொன்பான்
தூயகுலச் சிறையார்க்குப் பதினொன் றாகும்
கெழுமிழலைக் குறும்பர்பதி னொன்றாகுங் காளங்
கிளர்கண்டத் தார்பேய்க்கிங் கறுபத் தாறும்
செழுமறையோ ரப்பூதி நாற்பத் தஞ்சு
திருநீல நக்கர்க்கு முப்பத் தெட்டே. (௪)

பெட்டளிக்கு நமிநந்தி முப்பத்து மூன்றும்
பிள்ளையா யிரத்திருநூற் றைம்பத் தாறும்
முட்டிலா வேயர்கோன் நானூற் றாறு
மூலனார்க் குரைத்தனவு மிருபத் தெட்டாம்
தட்டறுத் தண்டியடி கட்கிருபத் தாறு
தாவில்புகழ் மூர்க்கர்க்குப் பன்னி ரண்டு
பட்டவா சோமாசி மாறர்க் காறு
பகருஞ்சாக் கியனார்க்குப் பதினே ழாமே. (௫)

ஆனசிறப் புலியாருக் காறும் நந்தம்
ஐயர்சிறுத் தொண்டனா ரெண்பத் தெட்டாம்
வானகழறிற் றறிவார் நூற்றெழுபத் தைந்தாம்
வருங்கணநா தர்க்கேழு கூற்றுவனார்க் கொன்பான்
ஞானநெறிப் பொய்யடிமை யில்லார் மூன்று
நல்லபுகழ்ச் சோழனார் நாற்பத் தொன்றும்
கானமருள் நரசிங்க முனையர்க் கொன்பான்
கடனாகை யதிபத்தர்க் கிருப தாமே. (௬)

தாமான கலிக்கம்பர் பத்தாம் தூய
தனிக்கலியர் பதினாறு சத்திக் கேழு
காமாதி யணுகாத காடவர்கோ னென்பான்
கணம்புல்லர்க் கொன்பதாங் காரிக் கஞ்சாம்

பாகாய நெடுமாறர் வாயி லார்க்குப்
பத்துப்பத் தாகுமுனை யடுவார்க் கேழாம்
எதில்கழற் சிங்கர்பதின் மூன்றே நித்தர்
இடங்கழியார்க் குப்பதினொன் றேறி னாரே. (எ)

சத்தராம் செருப்புகழ்கட் கேழே முக்கள்
சாருங்கோட் புலியார்க்குப் பதின்மூன்றே யாகும்
பத்தராய்ப் பணிவாருக் கெட்டாம் என்றும்
பரமனையே பாடுவார்க் கிரண்டாம் பார்மேற்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க் கொன்று
திருவாரூர்ப் பிறந்தவர்கட் கிரண்டாஞ் செப்பின்
முத்தாய முப்போதுந் தீண்டுவார் மூன்று
முழுநீறு பூசிவரும் முனிவர்க் காறே. (அ)

ஆறுதா ரங்கடந்த பொருளையே யன்மி
அப்பாலு மடிச்சார்வார்க் கிரண்ட தாகும்
பேறான பூசலுக்குப் பதினெட் டாகும்
பேதைமங்கை யர்க்கரசி மூன்றும் பேசில்
சீருத நேசனு ரைந்தாம் சோழர்
செங்கண ரிரண்டொன்பான் பாணர்பனி ரண்டாம்
வீறான சடையரிசை ஞானிக்கொவ் வொன்று
மிக்கவெள்ளா னைச்சருக்க மைம்பத்து மூன்றே. (கூ)



---

[தஞ்சாவூர் மகாராஜா சரபோஜி சரசுவதி மஹால் II 874 d பிரதியோடும் திருவையாற்றுக் கல்லூரிப் பேரோசிரியர் வித்துவான் தேர்ச்சி சைவஸ்ரீ தி. சோம சுந்தர தேசிகரவர்கள் பிரதியோடும் ஒத்துப் பார்த்து, சீகாழி ப. அ. முத்துத் தாண்டவராய பிள்ளை தமது பிரதியிலுள்ளவாறு வெளியிட்டது.]

# மதிப்புரைகள்

**ஞாயிறுநாட்டு ஸ்ரீசங்கிலி நாச்சியார் சரித்திரம்**:—பொன்னேரி தாலுக்காவில் சங்கிலி நாச்சியார் பிறப்பிடமாகிய ஞாயிறு கிராமத்து நாட்டாண்மைக்காரர் - ஜனாப் - எம். எஸ். காதர்முஹைதீன் சாஹிப் அவர்களால், அந்நாச்சியார் சரித்திரம் எளிய தமிழ் உரைநடையில் எழுதப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் அச்சிடப்படாவிடில் இதை இயற்றியவர் ஒரு பழுத்த சைவர் என்றே படிப்போர் அனைவரும் கூறக்கூடிய தன்மையில் இந்நூல் ஒரு முஸ்லிம் சகோதரரால் இயற்றப்பட்டது பெரிதும் போற்றத் தக்கது.

**ஈசுவர இராச்சிய பரிபாலனப் பிரபாவம்**:—பக்கம் 568. விலை ரூ. 1—8—0. மொழிபெயர்ப்பாசிரியர், D. கோபால் செட்டியார். கிடைக்குமிடம்:—D. கோபால் செட்டியார், "ரிபூரிபார்மர்" ஆசிரியர், இராயப்பேட்டை தபால், சென்னை. இந்நூலை மகிழ்ச்சியோடு வரவேற்கின்றோம். ஸ்வீடன்பார்க் ஆசிரியரது நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் தெய்வத் திருத்தொண்டை அன்புடன் ஏற்று, திரு. கோபால் செட்டியாரவர்கள் செவ்வனே நடாத்தி வருவது நமது நேயர்கட்குத் தெரியும். நமது பார்வைக்கு இப்போது வந்துள்ள நூல் ஸ்வீடன்பார்க் இயற்றிய "Divine Providence" என்ற லத்தீன் நூலின் மொழிபெயர்ப்பு. இந்நூலில் இச்சாசத்தி ஞானசத்திகள் தொழிற்படும் முறை சிறந்த அநுபூதி வகையில் கூறப்பட்டுள்ளது. அநுபூதியிற் கிடைக்கும் பற்பல நுட்பமான பொருள்கள் இந்நூலில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. நமது சித்தாந்த சாத்திரங்களில் கடினமாகவும் விளங்காமலும் உள்ள பகுதிகளையறிய இந்நூல் பெருந் துணையாகும். சைவ நன்மக்கள் இதை வாங்கவேண்டும்.

**குருநாதன் அருள் வாழ்வு**:—ஆசிரியர் - மா. துரைசாமி முதலியார். பக்கம் ௩௪. விலை அணா ஒன்று. கிடைக்குமிடம்:—முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை. இந்நூலில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் தூய தமிழில் ஸ்ரீமத் - பாம்பன் குமாரகுருதாச சுவாமிகள் சரித்திரத்தின் முக்கிய பகுதிகள் எளிய நடையில் கூறப்பட்டுள்ளன. சுவாமிகள் திருவுருவமும், சில பாடல்களின் திரட்டும், திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் முகவுரையும் இதிலுள்ளன. குகனடியார்கள் தவறாமல் இந்நூலை வாங்கிப் பயனடையவேண்டும்.



# மார்கழிப் பனுவல்கள்

[பத்திராசிரியர்] 4/8/72478 ...

## திருவெம்பாவை

திருச்சிற்றம்பலம்

ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள் தடங்கண், மாதே! வளருதியோ? வன் செவியோ நின்செவிதான்? மாதேவன் வார் கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி போய், வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்ம்மறந்து போதார் அமளியின் மேல் நின்றும் புரண்டு இங்ஙன், ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே! என்னே! ஈதே எந் தோழி பரிசேலோர் எம்பாவாய். க

(உரை) ஒளிமிக்க அகன்ற கண்களை யுடையவளே! முதலும் முடிவும் இல்லாத அரிய பெரிய சோதியாய் உள்ளவனை நாம் பாடக் கேட்டும் இன்னும் தூங்குகின்றாயே! உன் காதும் செவிடா? மகாதேவனுடைய வீரக்கழல் அணிந்த திருவடிகளை நாம் வாழ்த்தும் ஒலி தெருவில் கேட்டவுடனே ஒருத்தி விம்மியழுது மெய்ம்மறந்து மலர் தூவிய படுக்கையிற் புரண்டு மூர்ச்சை யாயினள். தோழியாகிய நீயோ இப்படி தூங்குவது? யாம் சொல்வதை ஏற்று ஆராய்வாயாக எம்பாவையே (இந்தக் கடைசி வாக்கியத்தை ஒவ்வொரு பாட்டு உரையின் கடைசியிலும் சேர்த்துக்கொள்க.) 1

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப் பகல்நாம் பேசும்போது எப்போது இப்போ தார் அமளிக்கே, நேசமும் வைத்தனையோ நேரிழையாய்? நேரிழையீர்! சீசீ! இவையும் சிலவோ? விளையாடி, ஏசும் இடம் ஈதோ? விண்ணோர்கள் ஏத்துதற்குக் கூசுமலர்ப் பாதம் தந்தருள வந்தருளும், தேசன் சிவ லோகன் தில்லைச் சிற்றம்பலத்துள் ஈசனார்க் கன்பார்? யாம் ஆர்? ஏலோர் எம்பாவாய். உ

(உரை) ஆபரணம் பூண்ட அழகியே! பசுமை நிறமுள்ள சத்தியுடன் கூடிய பரஞ் சோதியனை எலும்பு நெக்குருக அல்லும் பகலும் பாடுங்காலம் எக்காலம்? இம்மலரணையே நீ விரும்புவதோ? (என்று தோழியர் சொல்லத் தூக்கம்விட்டு எழுந்திருப்பவள்) நகைகளையுடைய நங்கைமாரே! சீ! சீ! உங்கள் வசைச் சொற்களில் இவை கொஞ்சம் தானோ? விளையாடி ஏசுவதற்கு இதுவோ சமயம்? (எனப் பிறர் பதில் சொல்வதாவது) எம்பாவையே! வானோர் வழுத்தினும் காணமுடியாத திருவடிகளை நமக்குத் தர, குருவாய் வந்தருளும் தேஜோ மயனும் சிவலோகனும் தில்லைத்திருக்கூத்தனுமாகிய சிவபெருமானுக்கு நமது அன்பு எந்த தன்மையுடையது? நாம் யார் அடிமைகள் அல்லோமோ? 2

முத்தன்ன வெண்நகையாய்! முன்வந் தெதிர் எழுந்தென் அத்தன் ஆனந்தன் அமுதன் என்றள்ளூறித், தித்திக்கப் பேசுவாய் வந்துன்கடை திறவாய்! பத்துடையீர்! ஈசன் பழஅடியீர்! பாங்குடையீர்!, புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டால் பொல்லாதோ? எத்தோ? நின்அன்புடைமை எல்லோம் அறியோமோ?, சித்தம் அழகியார் பாடாரோ? நம்சிவனை இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய். ங

(உரை) முத்துமாலைபோன்ற வெண்பல் வரிசையுடையவளே! (நேற்று வரையில் இதற்கு) முன்பு எங்களுக்கெதிரே எழுந்து வந்து "அத்தனே, அமுதனே, ஆனந்தனே" என்று வாயூறி இனிக்கப்பாடுவையே.(இன்று நாம் அழைத்தும்) எழுந்துவந்து கதவைத் திறக்கவில்லையே! (என்று தோழிமார் சொல்ல நித்திரைவிட்டு எழுகின்றவள்) நீங்கள் ஈசனுடைய பழைய அடியார்கள், அவனிடத்திலேயே பற்றுடையவர்கள், (அன்பென்னும் ஊற்றுப்) பாங்குடையவர்கள். நானோ புதிய அடியவள். எனது சிறுமையைத் தீர்த்து என்னை ஆட்கொண்டால் தீமை விளையுமோ? (என்று ஏசத்தோழியர் பதில் கூறுவதாவது) எத்தாகப் பேசுகிறாயோ? உனது அன்புடைமை எங்கட்குத் தெரியாதோ? தூயசித்தம் உடையவர் நமது சிவனைப் பாடமாட்டாரோ? எமக்கு வேண்டியது இத்தனையே (பாடுவதே). 3

ஒள்நித்தில நகையாய்! இன்னம் புலர்ந் தின்றோ? வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்தாரோ?, எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும் கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே!, விண்ணுக் கொருமருந்தை வேத விழுப் பொருளைக் கண்ணுக் கினியானைப் பாடிக்

கசிந்துள்ளம், உள்நெக்கு நின்றுருக யாம் மாட்டோம் நீயேவந்து எண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய். ௪

(உரை) பளபளப்பான முத்தைப்போன்ற பற்களை யுடையவளே! உனக்கு இன்னம் பொழுது விடியவில்லையா? (என்று தோழியர்கூற) கிளிபோல இனிமையாய்ப் பேசும் அழகிகள் எல்லாரும் வந்துவிட்டார்களா? (என்று நித்திரைவிட்டு எழுபவள் கேட்கத் தோழியர் பதில் கூறுவதாவது) வந்தவர்களை உள்ளபடிக் கணக்கிட்டுக் கூறுகிறேம். அது வரையில் தூங்கி வீண்பொழுது போக்காதே. வானோர்க்கு ஒப்பற்ற மருந்தை, வேதத்தின் சிறந்த பொருளைக், காண்பதற்கு இனிய வனைப் பாடிக்கசிந்து உள்ளம் உள்ளே நெக்குவிட்டு நின்று உருக யாம் இறைவன் வழியில் பொருந்திறேம். இதை நினைந்து நீயும் குறைவற்ற அறிவுத்துயில் (என்ற நிட்டையை) ஏற்பாயாக. 4

மால்அறியா நான்முகனும் காணாமலையினை நாம் போல் அறிவோம் என்றுள்ளப் பொக்கங்களே பேசும், பால் ஊறுதேன்வாய்ப் படிறீ! கடைதிறவாய்! ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான், கோலமும் நம்மை ஆட்கொண்டருளிக் கோதாட்டும் சீலமும் பாடிச் சிவனே! சிவனே! என்று, ஓலமிடினும் உணராய் உணராய் காண்! ஏலக்குழலி பரிசேலோர் எம்பாவாய். ௫

(உரை) திருமாலும் பிரமனும் காணாத (அனற்பிழம்பும்) அண்ணாமலை (யுமாகிய) இறைவனை, வெற்றுயிர்களாகிய நாமோ அறிவோம் என்று வேடிக்கையாகப் பொய் பேசும் கபடியே! கதவைத்திற! நிலவுலகினர், வானுலகினர், பிறவுலகினராகிய எவரும் அறிவதற்கரிய அருவத்தையும், நம்மையாட்கொண்டருளி மலத்தை நீக்கும் (குருலிங்க சங்கம) உருவத்தையும் பாடிச் சிவனே! சிவனே!என்று ஓலமிட்டு அலறினும் அதைக் கேளாமல் இன்னம் தூங்குகிறாயே! ஏலம் மணக்கின்றகொண்டையை உடையவளே! 5

மானே! நீ நென்னலை நாளை வந்துங்களை நானே எழுப்புவன் என்றலும் நாணாமே, போனதிசை பகராய்? இன்னம் புலர்ந்தின்றோ? வானே நிலனே பிறவே அறிவரியான், தானே வந்தெம்மைத் தலை அளித்தாட்கொண்டருளும் வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன்வாய் திறவாய்!, ஊனே உருகாய் உனக்கே உறும் எமக்கும் ஏனோர்க்கும் தம் கோனைப்பாடேலோர் எம்பாவாய். ௬

(உரை) (விழியாலும் அழகாலும்) மான் போன்றவளே! உங்களை நானே வந்து நாளைக்கு எழுப்புவேன் என்று நேற்று நீ கூறிய சொல்லும் நாணமில்லாமல் எந்தத் திசையில் ஓடிற்று? இன்னம்விடியவில்லையா? வானவரும் மண்ணுளோரும் பிறரும் அறிவதற்கரிய பெருமான் தலையன்போடு தானே வந்து எம்மை ஆட்கொண்டருளும் வானளாவிய திருவடியைப் பாடிவந்த எங்கட்குக் கதவைத்திற! பாட்டுக்கு உருகாததன்மை உனக்கே தகும். எமக்கும் பிறர்க்கும் நாதனை வானைப்பாடுக. 6

அன்னே! இவையும் சிலவோ? பல அமரர் உன்னற்கரியான் ஒருவன் இருஞ்சீரான், சின்னங்கள் கேட்பச் சிவன் என்றே வாய்திறப்பாய்! தென்னா? என்னாமுன்னம் தீசேர்மெழுகொப்பாய், என்னானை என்அரையன் இன்அமுதென்றெல்லோமும் சொன்னேம்கேள் வெவ்வேறாய் இன்னும் துயிலுதியோ?, வன்னெஞ்சப் பேதையர்போல் வாளாகிடத்தி யால் என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய். ௭

(உரை) தாயே! (உனது விளையாடல்களில்) இவையும் சிலவா? தேவர்களாலும் நினைத்தற்கும் அரியவனும் ஒப்பற்றவனுமாகிய பெரும்புகழுடையவனது (சங்கு முதலிய)திருச்சின்னங்கள் முழங்கக் கேட்டு "சிவ, சிவ" என்று கதவைத் திற. தென்னா (டுடைய சிவனே) என்று சொல்வதற்குள் நெருப்பின் அருகில் வைக்கும் மெழுகைப் போல உருகுவாய். (ஆனால் இப்போது) என் தலைவன், அரசன், இனிய அமிர்தன், என்று எல்லாரும் தனித்தனியே சொன்னாலும் இன்னும் தூங்குகிறாயே? கல்நெஞ்சுடைய மூடரைப்போல சும்மா உறங்குகிறாய். தூக்கத்தின் பெருமை தான் என்னே !. 7

கோழிசிலம்பச் சிலம்பும் குருகெங்கும் ஏழில் இயம்ப இயம்பும் வெண்சங்கு எங்கும், கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணைக் கேழில் விழுப்பொருள்கள் பாடினேம் கேட்டிலையோ?, வாழி ஈதென்ன உறக்கமோ? வாய்திறவாய்!,ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ? ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய்!. ௮

(உரை) கோழி கூவுகின்றது. மற்றப் பறவைகளும் பாடுகின்றன. எழில் முரசம் முழங்குகின்றது. சங்குகள் எங்கும் முழங்குகின்றன. தனது உரிமை வண்ணத்தைக் காட்டாத பரஞ்சோதியும் ஒப்பற்ற பேரருளாளனுமாகிய இறைவனது இணையற்ற புகழைப் பாடினோமே நீ கேட்கவில்லையா? நீ வாழ்கதேகிட! இது என்ன உறக்கமோ? கதவைத் திற. ஆஞ்ஞா சக்கரமுடையானும் அறவாழி அந்தணனுமாகிய கடவுளிடத்து உன்னுடைய அன்பு இவ்வளவு தானா? காலங்கடந்த முதல்வனும் உமையொருபாகனுமாகிய ஒருவனைப் பாடுக. 8

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே! பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே!, உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீர்அடியோம் உன் அடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம், அன்னவரே எம்கணவர் ஆவார் அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம், இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல் என்ன குறையும் இலோம் ஏலோர் எம்பாவாய்!. கூ

(உரை) முன்னைப் பழமைக்கும் பழையவனே! பின்னைப் புதுமைக்கும் புதியவனே! உன்னையே தலைவனாகப் பெற்ற சீருடைய அடியோங்கள் உன் அடியவர் திருவடி வணங்குவோம், அவ்வடியவர்கட்கே அன்பு செய்வோம், அவர்களே எங்கள் கணவருமாவதற்குரியவர்கள். அவர்கள் விரும்பிக் கட்டளையிடுவதைப் பணிவோடு பரிந்து செய்வோம். இவ்வாறே என்றென்றும் இருக்கும்படி அருள்புரிவாயானால் எம்பெருமானே எங்களுக்கு ஒரு குறையுமில்லை. 9

பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாத மலர் போதார் புனைமுடியும் எல்லாப்பொருள் முடிவே!, பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன் வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும், ஓத உலவா ஒருதோழன் தொண்டர் உளன் கோதில் குலத்தரன் தன் கோயில் பிணாப்பிள்ளைகாள்!, ஏதவன் ஊர்? ஏதவன்பேர்? ஆர்உற்றார்? ஆர்அயலார்? ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய்!. கo

(உரை) பாதாள உலகம் ஏழினுக்கும் கீழ் இங்குதான் என்று சொல்லமுடியாதபடி உள்ளது அவனுடைய திருவடித்தாமரை. பூவணிந்த அவன் திருமுடி எல்லாப் பொருளுக்கும் முடிவாயுள்ளது. ஒரு பாதியில் அம்மை விளங்குகிறாள். திருமேனி ஒன்றே உடையனல்லன். வேதங்களும் வானோரும் மண்ணுளோரும் எவ்வளவு புகழ்ந்தாலும் முடிவடையாத புகழையுடைய ஒப்பற்ற தோழன். தொண்டர் உள்ளத்தில் இருப்பவன். இத்தகைய அரனுடைய திருக்கோயிலில் வழிபடும் குற்றமற்ற உயர்ந்த குலப் பெண்மணிகளே! அந்த அரனுடைய ஊர் யாது, பேர்யாது, உறவினர் யாவர், அருகில் இருப்போர் யாவர்? அவன் புகழ்பாடும் வகை யாது? 10

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேர் என்னக் கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி, ஐயா! வழிஅடியோம் வாழ்ந்தோம் காண்! ஆர்அழல்போற் செய்யா! வெண்ணீறாடி! செல்வா! சிறுமருங்குல், மையார் தடங்கண் மடந்தை மணவாளா! ஐயா! நீஆட் கொண்டருளும் விளையாட்டின், உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம் எய்யாமல் காப்பாய் எமையேலோர் எம்பாவாய். கக

(உரை) ஆரவாரம்செய்து எரியும் அனல் போன்ற சிவப்பு நிறமுடையவனே! வெண்ணீறு பூசியவனே! செல்வனே! சிறிய இடுப்பும் மைபூசிய விசாலமான கண்களுமுடைய உமையம்மையின் மணவாளனே! எங்கள் தலைவனே! வண்டுகள் மொய்க்கும் (பூக்களையுடைய) பெரிய குளத்தில் மூழ்கி, "முகேர்" என்ற சப்தம் எழும்படியாகத் தண்ணீரைக் கையாலடித்துக் குடைந்து, உனது திருவடியைப் பாடி, உனது வழி நின்ற அடியோங்கள் வாழ்ந்தோம். ஐயனே! நீ (உயிர்களை) ஆட்கொண்டருளும் திருவிளையாட்டு முறைமைப்படி உய்வார்கள் உய்யும் வகைகளிலெல்லாம் (படிப்படியாகச் சரியை கிரியையோகம் ஞானம் என்ற வழிகளில் நின்று) உய்திகூடி முடித்தோம். இனி நாங்கள் வழுவாதிருக்க எங்களைக் காப்பாயாக. 11

ஆர்த்த பிறவித்துயர் கெடநாம் ஆர்த்தாடும் தீர்த்தன்! நற்றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும், கூத்தன்! இவ்வானும் குவலயமும் எல்லோமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி, வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள் ஆர்ப்பரவம் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப், பூத்திகழும் பொய்கைக் குடைந்து உடையான் பொற்பாதம் ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய். கஉ

(உரை) நம்மைக் கட்டுப்படுத்தும் பிறவித் துன்பம் ஒழியும்படி நாம் மகிழ்ந்து ஆடுதலாகிய வணக்கத்தை ஏற்கும் பரிசுத்தமானவனும், நல்ல தில்லைச் சிற்றம்பலத்தில் சோதிமயமாக நின்று ஆடுவோனும், வானுலகத்தையும் மண்ணுலகத்தையும் மக்களையும் உண்டாக்கிக் காத்து அழித்து விளையாடுவோனும் (ஆகிய சிவபெருமானுடைய) புகழ்வார்த்தைகளைப் பேசி, நமது வளையல்கள் குலுங்கவும், மேகலைகளாகிய ஆபரணங்கள் முழங்கவும், நமது அழகிய கொண்டைகளிலுள்ள (பூக்களை மொய்க்கும்) வண்டுகள் ரீங்காரம் செய்யவும் (தாமரைப்) பூக்கள் நிறைந்த குளத்துத் தண்ணீரைக் குடைந்து நம்மை யுடையவனது பொற்பாதங்களைப் புகழ்ந்து பெரிய சுனையிலே நீராடுவோம். 12

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால் அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால், தங்கள் மலங்கழுவுவார் வந்து சார்தலினல் எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த, பொங்குமடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநம் சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக், கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப் பங்கயப் பூம் புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். கங

(உரை) கருங்குவளைப்பூக்களும், செந்தாமரைப்பூக்களும், அழகிய பக்ஷிகளும், அவற்றின் பாட்டொலியும், தங்கள் அழுக்கைப் போக்க வருவோரும் இருப்பதினால் எங்கள் பெருமாட்டியையும் பெருமானையும் போலுள்ள (வற்றுநீர்) பொங்கும் இந்த மடுவில் இறங்கி நமது சங்குவளையல்களும், காலிலுள்ள சிலம்புகளும் கல்லென்று ஒலிக்கவும், நமது கொங்கைகள் (பூரித்துப்) பொங்கவும், நாம் குடைந்து விளையாடும் மடுவுநீர் பொங்கவும் இத்தாமரைத் தடாகத்தில் ஆடுவோமாக.

குறிப்பு:—கருங்குவளை போன்ற கண்ணையும், செந்தாமரை போன்ற முகத்தையும் அழகிய குருகுகளையும் (=வளையல்களையும்) சீங்காரம் செய்யும் வண்டுகள் நிறைந்த பூமாலையையும் உடையபடியால் எம்பிராட்டி இம்மடுவைப் போலுள்ளாள். கருங்குவளை போன்றகண்டத்தையும் செங்கமலம்போன்ற திருவடியையும் கொக்கிறகுகளையும் (குருகினம்) பின்னிக்கொண்டிருக்கும் பாம்புகளையும் (அரவம்) உடையபடியால் எம்பெருமான் இம்மடுவைப் போலுள்ளான். கருங்குவளை போன்ற கண்ணால் பார்த்து சக்ஷு தீக்ஷை செய்தும், செங்கமலம் போன்ற திருக்கரத்தையும் திருவடியையும் சிரசின்மேல்வைத்து ஸ்பரிச தீக்ஷைசெய்தும், குருகினம் பாடுவது போன்ற இனிய குரலில் உபதேசித்து வாக் தீக்ஷை செய்தும், "திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்" தம்மைச் சார்வாருடைய மலங்களைப் போக்குவதால் அருட்சத்தியோடு கூடிய இறைவன் இம்மடுவுக்கு உவமையாயினன். 13

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதைகுழலாட வண்டின் குழாம் ஆடச்
சீதப்புனல் ஆடிச் சிற்றம்பலம்பாடி
வேதப்பொருள்பாடி அப்பொருளாமாபாடி
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத்தார்பாடி
ஆதிதிறம்பாடி அந்தமா மாபாடிப் [தன்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்.

(உரை) காதிலுள்ள குண்டலங்களும், (மார்பிலுள்ள) பொன் நகைகளும், பூமாலை சூடிய கொண்டையும் அதை மொய்க்கும் வண்டின் கூட்டமும் ஆடும்படியாக இக் குளிர்ந்த நீரில் ஆடி, திருச்சிற்றம்பலத்தையும், வேதப் பொருளையும், இறைவன் அப் பொருளாகும் வகையையும், சோதியின் திறத்தையும், (இறைவனது) கொன்றைமாலையையும், (இறைவன்) ஆதியாகும் திறத்தையும், அந்தமாகும்வகையையும், மலத்தைப்போக்கி நம்மை வளர்த்தெடுத்த இறைவியின் திருவடிச் சிறப்பையும் பாடி ஆடுவோமாக. 14

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான் சீர்ஒருகால் வாய்ஓவாள் சித்தம் களிகூர, நீர்ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப் பார்ஒருகால் வந்தனையாள் விண்ணோரைத்தான் பணியாள், பேர்அரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும் ஆர் ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள், வார்உருவப் பூண்முலையீர்! வாயார நாம்பாடி ஏர் உருவப் பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய்!. கரு

(உரை) ஒவ்வொரு பொழுதிலும் "எம்பெருமானே" என்றென்று நம்பெருமானுடைய சீரைப் பாடுவதில் வாய் ஓயமாட்டாள். மிகுந்த மனக்களிப்புடன் தாரை தாரையாக ஓயாமல் (எம்பெருமானை நினைந்து) அழுவாள். தரையில் விழுந்து கும்பிடுவாள். வேறு தேவர்களை வணங்கமாட்டாள். பேரரசனிடம் (சிவபெருமானிடம்) பித்துக் கொண்டவர்கள் இப்படித்தான் ஆவார்களோ? கச்சையும் பூணும் அணிந்த கொங்கையுடையீரே! இவ்வாறு செய்து ஆட்கொள்

ளும் வித்தகர் (ஞானஸ்வரூபி) யாவரோ அவர் திருவடிகளை வாயார நாம் பாடி அழகாய்த் தோன்றும் இம்மடுவில் பாய்ந்து விளையாடுவோம். 15

முன்னிக் கடலைச்சுருக்கி எழுந்து உடையான் என்னத் திகழ்ந்து எம்மை ஆள் உடையாள் இட்டிடையின், மின்னிப் பொலிந்து எம்பிராட்டி திருவடிமேல் பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம், என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள் தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு, முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்அருளே என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்! ௧௬

(உரை) ஏ! மேகமே! முனைந்து கடல்நீரைச் சுருக்கி முகந்துகொண்டு, மேலே (ஆகாயத்தில்) சென்று, எம்மையுடையவளாகிய எம்பிராட்டியைப்போல் (நீல நிறத்தோடு) விளங்கி, எம்பிராட்டி இடுப்பில் அணிந்துள்ள ஒட்டியாணம் ஜ்வலிப்பதுபோல மின்னல்களால் பிரகாசித்து, எம்பிராட்டி திருவடிச் சிலம்போசைபோல் இடியிடித்து முழக்கி, (இறைவியின்)புருவம்போல (வளைந்த) வானவில்லை வளைத்து, தன்னையென்றும் விட்டு நீங்காத இறைவனுடைய அன்பர்க்கு முனைந்துவந்து அவள் அருளைப் பொழிவதுபோல (நீயும்) மழையைப் பொழிவாயாக. 16

செங்கணவன்பால் திசைமுகன் பால் தேவர்கள்பால் எங்கும் இலாததோர் இன்பம் நம்பாலதாக், கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச், செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை, நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப் பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய். ௧௭

(உரை) வாசனை மிகுந்த கறுத்த கொண்டையை உடையவளே! திருமால் பிரமன் முதலிய தேவரிடத்தும் வேறெங்கும் இல்லாத ஒப்பற்ற இன்பம் நம்மிடத்தில் இருக்கும்படியாக நம்மைச் சீராட்டி நம்முடைய வீடுகள் தோறும் (இருதயங்கள் தோறும்) எழுந்தருளித் தனது செந்தாமரைபோன்ற திருவடியைத் தந்து அருளுகின்ற சேவகனை, கிருபாநோக்கமுடைய அரசனை, அடிமைகளாகிய எங்கட்கு அருமையான அமுதை, எங்கள் பெருமானைப்பாடி நலம் அதிகரிக்கும்படி இத்தாமரைக் குளத்தில் பாய்ந்து ஆடுவாயாக. 17

அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும் விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்போல், கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத் தண்ணார் ஒளி மழுங்கித் தாரகைகள் தாம் அகலப், பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர் விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக், கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப் பெண்ணே! இப்பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய். ௧௮

(உரை) அண்ணாமலையானுடைய (சோதிமயமாகிய) திருவடிக்கமலத்தை வணங்கும் வானவர் கிரீடங்களிலுள்ள இரத்தினங்கள் எவ்வாறு (அச்சோதியின் முன்) பிரகாசிக்காமல் மழுங்கி யிருக்கின்றனவோ, அதைப் போலவே, சூரியனுடைய கிரணங்கள் இருளைப்போக்கிப் பிரகாசிக்க, நக்ஷத்திரங்கள் தங்கள் மின்னொளி மழுங்கி மறையும் (இவ் விடியற்காலத்திலே) ஏ! பெண்ணே! ஆண், பெண், அலி,ஒளிமிக்க வானம், மண்முதலிய வைகளாகியும் அவற்றின் வேறாகியும் சிறந்த அமுதமாகியும் நிற்கும் எம்பெருமானுடைய திருவடியைப்பாடி இப்பூம்புனலில் பாய்ந்து ஆடுவோமாக. 18

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று அங்கப் பழஞ்சொல் புதுக்கும் எம் அச்சத்தால், எங்கள் பெருமான்! உனக்கொன் றுரைப்போம்கேள்! எங்கொங்கை நின்அன்பர் அல்லார் தோள்சேரற்க, எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க கங்குல் பகல் எங்கண் மற்றொன்றும் காணற்க, இங் கிப் பரிசேஎமக் கெங்கோன் நல்குதியேல் எங்கெழில் என் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்!. ௧௯

(உரை) "உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்" என்ற பழமொழியைப் புதுப்பிக்க அஞ்சி, எங்கள் பெருமானே! உனக்கு ஒரு விண்ணப்பம் செய்கிறோம் கேள்: எமது கொங்கைகள் உன்னுடைய அடியவரல்லாத மற்றவர்களை . அடையக்கூடாது (அதாவது நாங்கள் சிவனடியாரைத் தவிர வேறெவரையும் திருமணஞ்செய்தல்கூடாது) என்பதும், எமது கைகள் உனது திருப்பணியைத் தவிர வேறெதையும் செய்தல் கூடாதென்பதும், இரவிலும் பகலிலும் எமது கண்கள் வேறெவற்றையும் காணுதல் கூடாதென்ப

தம் ஆகிய இவ்வரங்களை எங்கள் நாயகனே! எங்களுக்கு நீ கொடுத்துவிட்டால், கிழக்கில் உதிக்கும் சூரியன் வேறு எந்தத் திசையில் உதித்தால்தான் எங்களுக் கென்னபயம்? 19

போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர் போற்றிஅருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள், போற்றிஎல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம் போற்றிஎல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள், போற்றிஎல்லா உயிர்க்கும் ஈறும் இணையடிகள் போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம், போற்றி யாம்உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள் போற்றியாம் மார்கழி நீராடேலோர் எம்பாவாய். ௨௦

(உரை) ஆதியாகின்ற உனது சீர்பாதத்தைப் போற்றுகின்றோம், அதை எங்கட்கு அருளுக. அந்தமாகின்ற உனது திருவடியைப் போற்றுகின்றோம், அதை எங்கட்கு அருளுக. எல்லா உயிர்கட்கும் தோற்றமும், போகமும், ஈறும் ஆகின்ற உனது திருவடிகளைப் போற்றுகின்றோம், அவற்றை எங்கட்கு அருளுக. திருமாலும் பிரமனும் காணாத திருவடியையும் உயிர்கள் உய்யும்படி ஆட்கொண்டருளும் திருவடியையும் நாங்கள் போற்றுகின்றோம், அவற்றை எங்கட்கு அருளுக. (சிறந்த ஒழுக்கமாகிய இம்) மார்கழி நீராடலைப் போற்றுகிறோம். 20

திருச்சிற்றம்பலம்

---

[குறிப்பு:—திருவண்ணாமலையில் மார்கழி மாதத்தில் விடியற்காலையில் பெண்கள் ஒருவரை ஒருவர் எழுப்பி நீராடச் சென்றதைக் கண்ட மாணிக்கவாசகர் அப்பெண்கள் பாடியதாகத் தாம் பாடியது **திருவெம்பாவை.** நவசத்திகள் தம்முள் தொழிற்படும் முறைமையைக் குறிப்பதாகச் சொல்வதும் மரபு.]

## திருப்பள்ளியெழுச்சி

திருச்சிற்றம்பலம்

போற்றி! என்வாழ்முதல் ஆகியபொருளே! புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண், டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும் எழில்நகை கொண்டு நின் திருவடி தொழுகோம், சேற்றிதழ்க் கமலங்கள் மலரும்தண் வயல்சூழ் திருப்பெருந்துறை உறைசிவபெருமானே!, ஏற்றுயர் கொடிஉடையாய்! எனை உடையாய்! எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே!. ௧

(உரை) தாமரைப் பூக்கள் மலரும் குளிர்ந்த சேற்று வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறையிலுள்ள சிவபெருமானே! ரிஷபக் கொடியை உயர்வாக உடையவனே! என்னை உடையவனே! எம்பெருமானே! பொழுது விடிந்தது. உன்னுடைய மலர்போன்ற திருவடிகளை ஒரு படித்தான பூக்களால் பூசித்து வணங்குகிறோம். எங்களுக்குத் திருவருளைத் தரும் உனது திருமுகத்து அழகிய புன்முறுவலோடு படுக்கையிலிருந்து எழுந்தருள்வாயாக. 1

அருணன் இந்திரன்திசை அணுகினன் இருள்போய் அகன்றது உதயம் நின்மலர்த் திருமுகத்தின், கருணையின் சூரியன் எழஎழ நயனக் கடிமலர் மலரமற் றண்ணல் அங்கண்ணாம், திரள்நிரை அறுபதம் முரல்வன இவை ஓர் திருப்பெருந் துறைஉறை சிவபெருமானே!, அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே! அலைகடலே! பள்ளி எழுந்தருளாயே!.

(உரை) திருப்பெருந்துறையி லுள்ள சிவபெருமானே! திருவருளாகிய பொக்கிஷத்தைத் தரவருகின்ற ஆனந்த மலையே! அலைகள் நிரம்பிய கடலே! அருணோதயம் ஆயிற்று; இருள் போய்விட்டது; உனது அழகிய கண்ணைப்போல் (கருநிறமுள்ள) வண்டுகள் திரண்டு கூட்டமாக ரீங்காரம் செய்கின்றன. இவற்றை யறிந்து உன்னுடைய முகமாகிய மலரிலே கருணையாகிய சூரியன் தோன்ற, உனது கண்கள் வாசனையுடைய மலர்கள் போல மலரப் பள்ளிவிட்டு எழுந்தருள்க!. 2

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளிஒளி உதயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்

தேவ!நல் செறிகழல் தாள்இணை காட்டாய்!
திருப்பெருந்துறைஉறைசிவபெருமானே!
யாவரும் அறிவரி யாய்!எமக் கெளியாய்!
எம்பெரு மான்!பள்ளி எழுந்தரு ளாயே!

(உரை) திருப்பெருந் துறையிலுள்ள சிவபெருமானே! மற்றவர்கள் அறிவதற்கு அரியவனே! எமக்கு எளியவனே! எம்பெருமானே! தேவனே! குயில்கள் பாடுகின்றன; கோழிகள் கூவுகின்றன; மற்றப் பறவைகள் சப்தம் செய்கின்றன; சங்குகள் முழங்குகின்றன; நக்ஷத்திரங்களின் பிரகாசம் மழுங்கி சூரிய உதயத்தின் ஒளியோடு கலக்கின்றது. கழல் அணிந்த வீரம் பொருந்திய உனது நல்ல திருவடிகளை விருப்பமுடன் எங்களுக்குக் காட்டுவாயாக! பள்ளி எழுந்தருள்வாயாக.

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒரு
பால், துன்னிய பிணைமலர்க் கையினர் ஒரு
பால் தொழுகையர் அழுகையர் துவள்கையர்
ஒருபால், சென்னியில் அஞ்சலி கூப்பினர்
ஒருபால் திருப்பெருந் துறைஉறை சிவபெரு
மானே, என்னையும் ஆண்டுகொண்டு இன்ன
ருள் புரியும் எம்பெரு மான்!பள்ளி எழுந்
தருளாயே! ௪

(உரை) ஒரு பக்கத்தில் இனிய இசையோடு வீணையையும் யாழையும் வாசிக்கின்றார்கள்; மற்றொரு பக்கத்தில் இருக்கு முதலிய வேதங்களையும் தோத்திரங்களையும் சொல்லுகிறார்கள்; ஒரு பக்கம் அடர்ந்த பூமாலைகளை உனக்கு அணிவிக்கக் கையிலேந்தி நிற்கிறார்கள்; ஒரு பக்கம் தொழுது அழுது (அன்பின் மிகுதியால்) துவண்டு விழுவோர் நிற்கிறார்கள்; ஒரு பக்கம் தலைமேல் கை குவித்து உன்னைக் கும்பிடுவோர் நிற்கிறார்கள். திருப்பெருந் துறையிலுள்ள சிவபெருமானே! (மேற்கூறிய செயல்களும் அன்பு முதிர்ச்சியு மில்லாத) என்னையும் ஆண்டுகொண்டு இனிய அருளைப் புரியும் எம்பெருமானே! பள்ளி எழுந்தருளாயே! 4

பூதங்கள் தோறும் நின்றாய் எனில் அல்
லால் போக்கிலன் வரவிலன் எனநினைப் புல
வோர், கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்,
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்
னா! சிந்தனைக்கும் அரியாய்! எங்கள்முன்
வந்து, ஏதங்கள் அறுத்தெமை ஆண்டருள்
புரியும் எம்பெரு மான்!பள்ளி எழுந்தரு
ளாயே! ௫

(உரை) (நிலம், நீர், தீ, வளி, வான் என்னும் ஐந்து பெரும்) பூதங்கள் ஒவ்வொன்றிலும் நின்றாய் என்றும், (பிறப்பும் இறப்பும் ஆகிய) வரவும் போக்கும் இல்லாதவனென்றும், உன்னைப் புலவர்கள் கீதங்கள் பாடி ஆடுவதைத் தவிர, உன்னை நேரிற் கண்டவர்களைக் கேட்டும் அறியக் கூடவில்லை. சிந்தனைக்கு அரியவனே! குளிர்ச்சி பொருந்திய வயல் சூழ்ந்த திருப்பெருந்துறை மன்னவனே! (நீமேற்கூறியபடி அரிய தன்மையனுயிருந்தபோதிலும், எங்கள்மேல் வைத்த கருணையினால்) எங்கள் எதிரே வந்து எங்கள் குற்றங்களை அறுத்து எங்களை ஆட்கொண்டு அருள் புரியும் எம்பெருமானே! பள்ளி எழுந்தருள்வாய்! 5

பப்பற வீட்டிருந் துணரும்நின் அடியார்
பந்தனை வந்தறுத் தார்அவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றார் அணங்கின் மணவாளா!
செப்புறு கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே!
இப்பிறப் பறுத்தெமை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்!பள்ளி எழுந்தரு ளாயே! ௬

(உரை) உமை மணவாளனே! செந்தாமரைகள் மலர்கின்ற குளிர்ந்த வயல் சூழ்ந்த திருப்பெருந்துறையிலுள்ள சிவபெருமானே! ஒப்பற்ற வீட்டு நிலையிலிருந்து உணரும் உனது அடியார்களும், (உன்னை யடைந்து) தங்கள் (பிறவிப்) பந்தனையை அறுத்தவர்களும், மை பூசிய கண்களையுடைய பெண்களும், மக்களியற்கையோடு உன்னை வணங்குகின்றார்கள். இப்பிறப்பை அறுத்து எம்மை ஆண்டு அருள் புரியும் எம்பெருமானே! பள்ளியெழுந்தருளாயே! 6

அதுபழச் சுவையென அமுதென அறி
தற்கு அரிதென எளிதென அமரரும் அறி
யார், இதுஅவன் திருவுரு இவன் அவன்
எனவே எங்களை ஆண்டுகொண்டு இங்கெழுந்
தருளும், மதுவளர் பொழில்திரு உத்தர
கோச மங்கை உள்ளாய்! திருப்பெருந் துறை
மன்னா!, எது எமைப் பணிகொளும் ஆறது
கேட்போம் எம்பெருமான்! பள்ளி எழுந்தரு
ளாயே! ௭

(உரை) பழத்தில் சுவைபோலவும் அமிர்தம் போலவும், உள்ளதெனவும், அறிவதற்கு அரியதென்வும், எளியதெனவும், தேவர்களும் அறியமுடியாத தெனவும், பலவகையாகக் கூறப்படுகின்ற கடவுளாகிய திருப்பெருந்துறை மன்னவனே! நீதான் அவன்

என்றும்படியாக எங்கள் எதிரில் தோன்றி எங்களை ஆட்கொண்டு இங்கு எழுந்தருளி னாய். தேன் மிகுந்த பூஞ்சோலைகள் சூழ்ந்த திருவுத்தரகோசமங்கையில் உள்ளவனே! எம்மைப் பணிகொள்ளும் வழியெதுவென்று கேட்போம். எம்பெருமானே! பள்ளி எழுந் தருளாயே! 7

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர் மற்றறிவார்?
பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்
பழங்குடில் தொறும் எழுந்தருளியபரனே!
செந்தழல்புரை திருமேனியும் காட்டித்
திருப்பெருந்துறை உறைகோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டிவந்து ஆண்டாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தருளாயே! ௮

(உரை) பந்து விளையாடும் விரல்களை யுடைய உமையம்மையும் நீயுமாக உனது அடியார்களுடைய பழைய குடிசைகள் தோறும் எழுந்தருளிய பரமனே! எல்லாவற் றுக்கும் முதலும் நடுவும் முடிவும் ஆன வனே! (பிரமன், விஷ்ணு, உருத்திரன் ஆகிய) மூவரும் உன்னை அறியார். வேறு எவர்தான் அறியவல்லார்? செந்தீபோன்ற உனது திருமேனியையும், திருப்பெருந் துறையில் உனது கோயிலையும், நீ (கருணை மிகுந்த) அந்தணன் ஆவதையும் காட்டி எளிதில் வந்து என்னை ஆட்கொண்டாய். அரிய அமுதமே! பள்ளி எழுந்தருளாயே! 8

விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப்பொருளே! உன தொழுப்படியோங்
கள், மண்ணகத்தே வந்து வாழச் செய்
தானே! வண்திருப் பெருந்துறையாய்! வழி
அடியோம், கண்ணகத்தே நின்று களிதரு
தேனே! கடலமுதே! கரும்பே! விரும்படி
யார், எண்ணகத்தாய்! உலகுக்கு உயிரானாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! ௯

(உரை) வானுலகத்திலுள்ள தேவர்களும் நெருங்கி அணுகவும் முடியாத பெரும் பொருளே! உனக்குத் தொண்டு செய்யும் அடியவர்களாகிய எங்களை இம்மண்ணுலகத் தில் வந்து வாழச் செய்தவனே! வளம் மிக்க திருப்பெருந்துறையானே! உன் வழி நிற்கும் அடியோங்களுடைய உள்ளத்திலிருந்து இன் பம் அளிக்கும் தேனே! பாற்கடல் அமுதமே! கரும்பே! விரும்பும் அடியாரது எண்ணத்தில் உள்ளவனே! உலகுக்கு உயிரானவனே! எம் பெருமானே! பள்ளியெழுந்தருளாயே! 9

புவனியில் போய்ப்பிற வாமையில் நாள்
நாம் போக்குகின்றோம் அவமே இந்தப் பூமி,
சிவன் உய்யக் கொள்கின்ற வாறென்று
நோக்கித் திருப்பெருந்துறை உறைவாய்!
திருமாலாம், அவன் விருப்பெய்தவும் மலா
வன் ஆசைப் படவும்நின் அலர்ந்த மெய்க்
கருணையும் நீயும், அவனியிற் புகுந்தெமை
ஆட்கொள்ள வல்லாய்! ஆரமுதே! பள்ளி
எழுந்தருளாயே! ௧௦

(உரை) திருப்பெருந்துறை உறைவோ னே! ஆரமுதே! "பூலோகத்திற் போய்ப் பிற வாமையினால் நாம் வாழ்நாளை வீணகப் போக்குகின்றோம்; இந்தப் பூமியைச் சிவன் உய்யக் கொள்கின்ற வழி இது" என்று கூறித் திருமால் (பூமியில் பிறக்க) விருப்பங் கொள்ளவும், பிரமனும் (அவ்வாறே) ஆசைப் படவும் நின்றனர். நீயும் உனது மலர்ந்த பேரருளும் பூமியில் தோன்றி எங்களை ஆட் கொள்ள வல்லவனே! பள்ளியெழுந்தரு ளாயே! 10

திருச்சிற்றம்பலம்

## முக்கிய அறிக்கை

தங்கள் சந்தாவை 1-1-1934-க்குள் அனுப்பிவிட வும். இல்லாவிடில் அடுத்த இதழ் வி. பி. யில் வரும். அதனால் தங்கட்கு வி. பி. செலவு அணு 3 வீண் நஷ்ட மாகும்.

காரியதரிசி.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உமாபதிசிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டு உரை

(மலர் ௯, இதழ் ௧௧, 272-ம் பக்கத் தொடர்ச்சி)

ஞானாசிரியன்பாற் கேட்ட அறிவினால் சிவஞானபோதம் 8-வது சூத்திரத்திற்கூறப்பட்ட சிவரூப விளக்கமும் அதனோடு உடனிகழும் ஆன்ம தரிசனமும் சிந்தித்தல் அறிவினால் 9-வது சூத்திரத்திற் கூறப்பட்ட சிவதரிசனமும் அதனோடு உடனிகழும் ஆன்மசுத்தியும் தெளிதல் அறிவினால் 10-வது சூத்திரத்திற் கூறப்பட்ட சிவயோகமும், நிட்டை அறிவினால் 11-வது சூத்திரத்திற் கூறப்பட்ட சிவபோகமும் உண்டாகின்றன. இந்த நான்கு அறிவு நிலைகளும் முறையே ஒன்றன்பின்னொன்று ஏதுவும் பயனுமாயுள்ளன. ஒவ்வொரு நிலையிலும் அருட்சத்தி பதிதல் மிகுந்து மிகுந்து நான்காவது நிலையில் நிறைவு அடைகின்றது. இந்த நான்காவது நிலையில் ஆன்மாவினுடைய உள்ளம் சிவகரணமாய் மாறி சிவம் எனப்படுகின்றது. "சிந்தைய தென்னச் சிவமென வேறில்லை" என்றார் திருமூலர். (2853-வது திருமந்திரம்). இந்த நிலையில் ஆன்மாவானவன் இறைவனுடைய வியாபக அறிவுடன் இரண்டறக் கலந்து அவனுடைய எண்குணங்களும் பதியப்பெற்று யாதொரு குறையு மில்லாதவனாயும் பேரின்பப் பெருவாழ்வுடையவனாயுமுள்ள சீவன் முத்தனாய்த் திகழ்வன். சீவன் முத்தனுக்கு எடுத்த உடல் நீங்கும் காலம்வரை உடலூழாய்க் கழிய இருக்கிற பிராரத்தவினை மாத்திரம் உண்டு. உடல் நீங்கவும் அவன் நித்தியமான பரமுத்தி அடைவன். தெள்ள - முறத்தில் வைத்துத் தூலப்பொருள்களைத் தெள்ளி வேண்டாத பொருள்களிலிருந்து வேண்டிய பொருள்களைப் பிரித்து நீக்குதல்போல் உள்ளத்தில் வைத்து அதில் விளங்கும் கருவி அறிவை அருள் அறிவிலிருந்து பிரித்து நீக்குதல் (Sifting) அதாவது ஆன்மா கருவி கரணங்களோடு சேர்ந்து அறிதலை முயன்று நீக்கி அருள் அறிவுடன் சேர்ந்திருத்தல். உலகநெறியில் முற்றிலும் கருவி கரணங்கள் வழியில் அறிந்து வந்த ஆன்மா வீட்டுநெறியில் அவைகளைவிட்டு அருளைச் சேர்ந்து அறியும்பொழுது பழைய வாசனையினால் கேட்டல் அறிவில் வந்து சேர்கிற கருவி கரணங்களை நீக்கல்வேண்டும் என்பது கூறப்பட்டது. தேறி - தேற என்பது தேறி எனத் திரிந்து நின்றது. சிந்தித்தலினால் - இன்னும் ஆன்மா கருவி கரணங்களுடன் சேர்ந்து அறிதலை நீக்குதலால். (Re - Sifting). தெளிந்து - தெளிய என்பது தெளிந்து எனத் திரிந்து நின்றது. தெளிவு அறிவில் ஆன்மா சிறிதும் கருவி கரணங்களுடன் சேர்ந்து அறிதலின்றியிருத்தலினாலே உள்ளம் பசுகரணம் நீங்கிச் சிவகரணமாய்விடுகின்றது. "அறியாமை அறிவகற்றி யறிவினுள்ளே அறிவுதனை யருளினா லறியாதே யறிந்து - குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயில்" என்று தெளிவு அறிவைப் பற்றிச் சிவஞான சித்தியார் கூறுதல் காண்க. தித்திப்பதோர் உள்ளம் தேறல் அமுதம் வெளி ஒளி - தெள்ள, தேற, தெளிய என்ற மூன்று சொற்களும் காரணப் பொருளில் வந்தன. தெள்ளுதலினாலும் தேறுதலினாலும் தெளிதலினாலும் தித்திப்பது ஓர் உள்ளத் தேறலமுதம் எனப் பொருள் செய்க. தித்திப்பது- தொழிற்பெயர். உள்ளத் தேறல் அமுதம் - பசுகரணம் நீங்கிச் சிவமாய்த் திகழ்கின்ற உள்ளத்தில் உணரப்படும் பேரின்பம். தேறல் அமுதம் - தேறலும் அமுதமும். உம்மைத் தொகை. உள்ளம்+தேறல் என்பன மகரஈறு கெடுதலாலும் நிலைமொழி வன்மைக் கினமாகத் தகரவொற்றுத் தோன்றுவதாலும் உள்ளத் தேறல் ஆயின. பேரின்பத்தை உலக அநுபவத்தில் மக்களுக்குத் தெரிவிக்கும் பொருட்டு தேறலும் அமுதமும் என உருவகஞ் செய்தார். நோய் நீக்க மருந்தாயுதவுகின்ற தேன் மலநோய் நீக்கத்தா லுண்டாகும் அறிவு விளக்கத்தையும் சாவை நீக்குகின்ற அமுதம் நித்தியமான இன்ப விளக்கத்தையும் குறிக்கின்றன என்று நாம் கூறலாம். பேரின்பமானது இறைவனுடைய திருவடிகளை அடைந்தன்றிப் பெறப்படாததால் 'ஓர் உள்ளத் தேறல் அமுதம்' என்றார். வெளி - முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நிற்கிற ஞான ஆகாசம். இது பரவெளி பெருவெளி தூவெளி, சிற்பரவியோமம், திருச்சிற்றம்பலம், சிதாகாசம், சிதம்பரம் என்ற பெயர்களாலும் கூறப்படுகின்றது. அந்த வெளியில் விளங்குகிற பராசத்தி ஒளியை வெளி ஒளி என்றார். இந்த ஒளியே பேரறிவாய் விளங்குவது. இந்த

ஒளியே தத்துவங்களில் ஏகதேசப்பட்டு உலக அறிவாய் விளங்குவது. எங்கும் வியாபகமாயிருக்கிற இந்தப் பேரொளியானது ஆன்மாவுக்கு மலத் தொடக்கினால் முன் விளங்காதிருந்தது. படலம் நீங்கிய கண்ணுக்குக் கதிரவனொளி விளங்குதல் போல மலம்நீங்கின ஆன்மாவுக்கு அப்பேரொளி வியாபகம்விளங்கி அப்பேரொளியில் ஆன்மா வியாப்பியமாய் நிற்கிறது. வெளி ஒளி - வெளியின்கண் விளங்கும் ஒளி. ஏழாம் வேற்றுமைத் தொகை. மேலான அத்துவித நிலையானது பேரறிவும் பேரின்பமும் கூடுமிடமாதலால் தேறலமுதம் ஆகிய வெளி ஒளி என்று பொருள்படும். தேறலமுத வெளி ஒளி என்றார். தேறலமுதமும் வெளி ஒளியும் என உம்மைத் தொகையாகாது என்பது விளைந்ததே என்ற ஒருமை வினை முற்றால் விளங்கும். "அண்டங்க ளேழுங் கடந்தகன் றப்பாலும் உண்டென்ற பேரொளிக் குள்ளா முளவொளி, பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே கொண்டவ னன்றி நின்றான் எங்கள்கோவே" என்று திருமூலர் பேரொளியாகிய பெரு வெளியையும் அதனில் உள்ளொளியாய் விளங்குகின்ற பராசத்தியையும் கூறியருளினமை காண்க. கள்ளத்தேன் கடியேன் கவலைக்கடல் உள்ளத்தேன் - கள்ளத்தேன்; கடியேன், உள்ளத்தேன் மூன்றும் குறிப்புவினையாலணையும் பெயர்கள்- ஏன் - தன்மை ஒருமை விகுதி. கள்ளம் என்பது பொய், வஞ்சனை; இறைவனை நோக்காது உலகை நோக்கி ஒழுகும் வாழ்விலுள்ள வஞ்சனை. கடி என்பது இங்கே ஐயம் என்ற பொருளில் வந்தது. உலக வாழ்வில் இறைவனை ஒருவன் உண்டோ இல்லையோ என்று உள்ளத்தில் ஐயங்கொள்ளுதல். இப்பேர்ப்பட்ட வஞ்சகமும் ஐயமுமுள்ள ஒருவனது உள்ளத்தில் கவலைகள் நிரம்பியிருக்கு மாதலின் 'கவலைக் கடல் உள்ளத்தேன்' என்றார். இத்தகைய கவலைகள் நிரம்பிய உள்ளத்தில் சிவம் விளங்கிப் பேரின்ப உணர்வு உண்டாகாது ஆதலின் உள்ளத் தேறலமுதம் ஆகிய வெளி ஒளி எவ்வாறு விளைந்தது என்றார். அடிகள் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றபின் குற்றங்கள் முழுதும் நீங்கப்பெற்ற அவரது தூய உள்ளத்தில் பேரறிவு விளக்கமும் அதனோடு உடனிகழ்கின்ற பேரின்ப உணர்வும் உண்டாயின என்பது இந்தப் பாட்டினால் நாம் அறியக்கிடக்கும் உண்மையாகும்.

உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத்
 துறுப்பினது குறிப்பாகு மைவீர் நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க் கையோ
 வையகமே போதாதே யானேல் வானோர்
பொன்னுருவைத் தென்னூர் மன்னு குன்றைப்
 புலிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைப் புகுந்தென் சிந்தை
தன்னுருவைத் தந்தவனை எந்தை தன்னைத்
 தலைப்படுவேன் றுலைப்படுப்பான் றருக்கேன் மின்னே. ௬௦

(உரை) நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை உறுப்பினது குறிப்பாகும் உன் உருவில் ஐவீர் - நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை என்ற விடய குணங்களாகிய உறுப்புக்களைக் குறிகளாகக் கொண்டு ஒழுகுகின்ற மனதினால் எண்ணப்படும் சூக்கும உருவங்களையுடைய தன்மாத்திரைகளாகிய ஐவர்களே; நுங்கள் மன் உருவத்தியற்கைகளால் வைப்பீர் - நீங்கள் இந்த உலகத்தில் திரோத மலம் வயப்பட்ட உயிர்களை எல்லாம் உங்கள் நிலையில்லாத உருவங்களினது இயற்கைவழி ஒழுகும்படி செய்வீர்; வையகமே போதாதே ஐயோ - அவ்வாறு நீங்கள் ஆட்சி செய்தற்கு இந்தப் பெரிய உலகமும் இடம் போதாதிருக்கின்றது. ஐயோ!; யானேல் - (நீங்கள் அவ்வாறு என்னையும்

